உ

சிவமயம்.

ஓம் மகா கணபதி துணை.

# ஸ்ரீ அத்வைதாமிர்த சாரசங்கிரகம்

என்னும்

# அமிர்தவல்லி மாலை

இது

ஸ்ரீ சமிவனக்ஷேத்திர மென்னும் ஸ்ரீகோவிலூர்
மடாலயம்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர்

பாதசேகரரான

ஸ்ரீ சுப்பையஸ்வாமிகளால்

ஸ்ரீ பாரிஜாதகவன மென்னுந் திருக்களரியிலெழு
ந்தருளிய அமிர்தவல்லியம்மன் பேரில்

இயற்றப்பெற்று

மகா-௱-௱-ஸ்ரீ பூவனூர் சு. ருசமுதலியாரவர்களா
லும் மகா-௱-௱-ஸ்ரீ களப்பாள் S. இரங்கசாமி
முதலியாரவர்களாலும்

மன்னார்குடி

பாரதி அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

1911.

No: 23
ACC. NO.
45195
R65-கோவி

சிவமயம்.

ஓம் மகா கணபதி துணை.

# ஸ்ரீ அத்வைதாமிர்த சாரசங்கிரகம்

என்னும்

# அமிர்தவல்லிமாலை

## மங்கலம்.

சீருறு வலம்புரிச் செல்வ நாயக
வீரசே கரகுரு விரைச்செந் தாமரை
யேருறத் தொழுதெழ வெழுமென் னுவினின்
வாருறு மமுதநல் வல்லி மாலையே.

## நூல்

## முதலாவது சமன்வயப்பிரகரணம்.

A 45195

### 1. விதிவிசாரம்.

சமதம நிறைந்த வறிஞருக் குனது தண்ணறி வுறமறையறைபுரு
சிமிசுரோ தவிய விதியினேர் வாதி சேர்வுறுஞ் சிலபல புரிவா
னமைவுற வெனது மனந்தனைப் புரிந்தே யாட்கொள றகுஞ்சுதர் தாமாம்
வமிசமே குயிற்றுஞ் செயற்கையா யமுத வல்லியே களர்வள ருமையே. 1

சிரவண விதிய தென்னென வினவச் சிவைவினை துணர்வினே துவதாய்
வரவதி லபூர்வ மெனவழுங் குறுவர் வழுத்துறு மினதடி பணிவோர்
திருமகள் கொழுனன் கலைமக ளுதன் றேவர்கள் யாவரும் புகழும்
வாமுறு கருணை நிறைதரு மமுத வல்லியே களர்வள ருமையே. 2

கேட்கையப் ராப்த மன்றெரு புடையாய்க் கொர்ந்திடு நியமம்பா ரோக்ஷயம்
கேட்கையா லாகு மனனமா ரதனுற் கிடைத்திடுங் காட்சியக் கதனில்
வேட்கையா நியம மென்றருள் புரிந்தாய் விரைநிறை பாரிஜா தேசன்
வாட்கையி னலமே பலவடி வமுத வல்லியே களர்வள ருமையே. 3

காணலிற் கரண நிருமல மனமாங் கழறுத லன்றது பிறிதில்
மாணதி னியம மனமதே கரண மற்றது துணையென நியமம்
பூணெனப் புகன்றாய் காரணி யுலக பூரணி யாரணி யெனவே
வாணிமெய் புகழுங் காணியே யமுத வல்லியே களர்வள ருமையே. 4

புருடர் தம்மாசு போக்குற நியமம் புகுமயன் முயல்வினை யொழிப்பா
னொருபரி யெண்ணுந் திரிவித மிலதா முண்மையை யுணர்த்தினை மறவேன்
றெருவுக ணிறைய மனுதெனஞ் சோலை தினகரன் றனைநணி மறைப்பான்
வருதரு வனவற் றழுவுறு மமுத வல்லியே களர்வள ருமையே. 5

## 2. காரணத்வ விசாரம்.

முத்தொழிற் றனித்து நினதிலக் கணமா முற்றினு நினதிலக் கணமா
மொத்துற வபின நிமித்தொபா தான மூலகுரு விவர்த்தமா மதுவுஞ்
சத்துறு விடம வயலிய லெனவே தாய்நின தருளினு லுணர்ந்தேன்
வத்துவே சித்தே யின்புரு வமுத வல்லியே களர்வள ருமையே. 6

தூயது மாயைமேயதும் வானந் தொன்னின துளமிரு வரதா
மாயிரு மறைக ளுணர்த்தலி னுயிரா தாகுமம் மறைக்கருத் தயலாஞ்
சேயென தரிய சிறுவனே யென்றாய் செங்கரி கந்தனென் னுமம்
வாயிரு குமர ராயெனு மமுத வல்லியே களர்வள ருமையே. 7

ஒன்றென மாயை யவித்தையை யுவந்து முயிரிடத் தாதலா லுயிரே
துன்றிய விவகா ரத்துற னினது தோற்றமற் றதுவெனச் சொற்று
யன்றுமன் மதனை யழலெழ விழித்த வையன்கை யுறமிக வழுந்தும்
வன்றறு மேரு விகழ்குய வமுத வல்லியே களர்வள ருமையே. 8

கனவினை யுறழ வுயிரெவை தமக்குங் காரண மாயையு நீயு
நனிபரி ணும விவர்த்த மதாலே நண்ணிடு மெனவினி துரைத்தாய்
மனநுற முனிவர் நினைதரு மரிய மங்கலப் பதங்கள்போன் றுருவிரும்
வனசம்வாழ் தேவி மார்தொழு மமுத வல்லியே களர்வள ருமையே. 9

தேவிநிற் புகன்று வாயிலாய் மாயை செப்பியின் காரியத் துலவு
வாவதுஞ் சுயமாய் நீயுபா தான மாயினுந் துணைகுண மாயை
மேவவின் மாயை காரணங் கவுண மேனினக் கென்பது முணர்ந்தேன்
வாவிக ணிரைய மகிழ்வுறு மமுத வல்லியே களர்வள ருமையே. 10

## 3. ஜீவேசுவரி ஸ்வரூப நிர்ணய விசாரம்.

இருவகைப் பிரதி பிம்பமு மிருவ ரிறைவினின் மாயையே பகுதி
யரியவங் கிசங்க ளிரண்டிற லவித்தை யாகுமென் றாரிய ரறைந்தார்
திருமுனி பணியச் சினந்தவ மான திவ்வியத் தலத்தனி னுறைவோய்
வரையிறை மகளே முகுளித வமுத வல்லியே களர்வள ருமையே. 11

மூக்குண மதனி லொன்றிரண் டிரண்டா மூலமாம் பகுதியே யிரண்டு
மிக்க சத்திகளான் மாயையு மவித்தை மிளிர்தரு மென்றெனக் கறைந்தாய்
துக்கசா கரத்தே தவித்திடு மெனையுந் துயரலென் றஞ்சலித் தெடுக்கும்
வக்கண மிணங்கு மன்னையே யமுத வல்லியே களர்வள ருமையே. 12

துக்கர வவித்தை காரியக் காரணந் துதைதிழ லிருவரா மதியின்
றக்கவா சனைசா ரிருண்மதி நிழல்க டடையிலா விருவரென் றுரைத்தாய்
கக்கிய வசன மொக்கவே காணுங் கடுந்தவ ரிருப்பவிவ் வெனையும்
வக்கிர துண்டற் கடிமையாக் கமுத வல்லியே களர் வள ருமையே. 13

பிம்பமும் பிரதி பிம்பமு மிருவர் பிறங்கவச் சினனலன் மனத்தே
பம்பிவை யலவா மவித்தையா னீயே பன்னுறு லீலையென் றறிந்தேன்
ஐம்பொறி வழியை யணுகுரு வரிய வருந்தவர்க் கைந்தெழுத் தருள்வான்
வம்புறு கடம்ப மகற்றரு மமுத வல்லியே களர்வள ருமையே. 14

## 4. ஜீவைக்தவநானாத்வ விசாரம்.

உயிர்கள்பற் பலவோ வொன்றதோ வெனவே யொன்றுயி ரோடுறு மாக
மயல்கணுப் புரையு மிரணிய கருப்ப னம்மைகின் னிழலத னிழல்க
ளயலுயி ரென்று யருக்கரும் பெனவே படர்ந்திடு நெற்பயிர் நிறையும்
வயனிறை கயல்கள் மயக்குகண் ணமுத வல்லியே களர்வள ருமையே. 15

ஏகனே காய மியாவையுந் தனதா யெண்ணுறு மின்பசங் கரமோ
வாகவேற் றுமையா லணுகுரு காரண மவற்றினுற் சீவநா னத்வ
மாகுமென் றிசைத்தா யருந்தவன் றனக்கா யாலவாய் வீதியி லமர்ந்த
வாகுகற் புணருங் குணகண வமுத வல்லியே களர்வள ருமையே. 16

கரிவினை யணைந்து மறைந்திடு மொன்றே கரிமறை பிரிவுகள் பலவா
மிரிதலி லிலமா மிருதயக் கிரந்தி யேதுவா மவித்தையொற் றுமைக்கே
யரியவிக் கிதனை யறியென வறைந்தா யருமறை யமரர்கள் போற்ற
வரிவனத் தாடிநிறை புயி ரமுத வல்லியே களர்வள ருமையே. 17

விளைபொருள் வரையு மறிவினி னுடபி வியக்தியெப் துறமனச் சிறுகாற்
றளையுயிர் விளையும் விருத்திவை விடயாச் சாதன நீக்கிட வதனை
யளவொரு வாயி லாக்கிடு மெனவே யடியனுக் களியினு லறைந்தாய்
வளர்நிறை காத்தால் வாவெனு மமுத வல்லியே களர்வள ருமையே. 25

## 8. சம்பந்த விசாரம்.

விபுவிட யங்க ளொற்றுமை யோரின் விடயவின் விடயிமற் றுயிரி
னபினமாம் விருத்தி யொற்றுமை சையோ கஜசையோ கம்பரிச் சினமா
யபினமா மயிக்க மதனினு னெனவே யாகினை தருளினு லறிந்தேன்
வபுமர கதமாம் வடிவினு யமுத வல்லியே களர்வள ருமையே. 26

## 9. அபேதாபி வியக்தி விசாரம்.

விடயவுட் கரண சேதன வயிக்கம் விடயசே தனநிழ லுளமார்ந்
திடுமுணர் வயிக்கங் கடபிம்ப வுணர்வுக் கின்னுபி ரயிக்கமென் றருளா
னடுவினை யுணர்த்தினளின மென் றலைபி னுட்டிய பரிசையான் மறவேன்
வடமொழி தமிழின் மொழிபொழி யமுதவல்லியே களர்வள ருமையே.27

## 10. ஆவரணபிபவ விசாரம்.

மறைப்புற லமிச நாசமுட் சுருட்சி மாற்றுறல் விருத்தியோ டுற்ற
சிறப்பறி வநாவா ரகத்வநல் வியல்புஞ் செறியவத் தாவிரு ளெனவாங்
திறப்பட வுணர்தி யென்றுணர்த் தினைநீ தேவிநின் றனையுணர்ந் தவர்க்கு
வறுப்புறு விரையில் நுகர்வரு ளமுத வல்லியே களர்வள ருமையே. 28

## 11. அவஸ்தாஞ்ஞான சாதித்துவானுதித்வ விசாரம்

புகலிரு ளாதி யற்றது துயில்போற் புக்கது புக்கிலாப் பக்கத்
தகல்வதொவ் வொன்ரு முன்னின்மை நிகர்ப்ப வவ்வுழி யுறவுற நீக்க
மகல்வுரு மறைக்கு மியாவையு மொன்ரு லழிவொளி வாமென வறைந்தாய்
வகைவகை யமரர் பணிதரு மமுத வல்லியே களர்வள ருமையே. 29

## 12. தாராவாஹிகதுஷ்டியாதி ஞானவைபல்ய பரிகார விசாரம்

இன்னண மாயிற் ருரையின் றலத்தி லென்னவா மெனமுத லதனுற்
பின்றுறன் மறைக்கும் போதுறப் பிறங்கும் பின்னதாற் றேயமொ டடையா
மென்னவெற் கருளு மெழிலையென் சொல்வே னிருமக விருபுர யமர
வன்னயான் பணிய முன்னரு ளமுத வல்லியே களர்வள ருமையே. 30

## 13. பரோட்ச ஞானத்தின் அஞ்ஞான நிவர்த்தகத்வ அநிவர்த்தகத்வ விசாரம்.

*இவ்வகை நியம மென்கொலோ வம்மே யென்றிடி லிருவித முயிரே*
*கவ்வுறு மறைப்புக் காட்சியற் றழிபுவ கருத்தினி லிருத்தென வுரைத்தாய்*
*திவ்விய முனிக்குப் பிரமதாண் டவத்தைச் செய்திடு ஞான்றக மகிழ்வாய்*
*வவ்விருள் கடிய வாமமா ரமுத வல்லியே களர்வள ருமையே.* 31

*உளபொருள் களிலே யிருளுறு மழிவோ வுறும்பெருங் காட்சியாற் சுகாதி*
*தளவுறா தெனிலே சாக்ஷிபா சியமாய்ச் சார்தலி னின்றென வுரைத்தா*
*யிளவலுக் கரிய தமிழ்மறை பாட வின்னமு தளித்தசீர்க் குயமாம்*
*வளர்திரு வமுத கலசமா ரமுத வல்லியே களர்வள ருமையே.* 32

## 14. சாட்சி சொரூப நிர்ணய விசாரம்.

*சாக்ஷியே யிரண்டு தனுவதிட் டான சச்சிற்கூ டத்தமாஞ் சிவன்*
*மாக்சட வுளமன் றன்னையே யுன்னை மாறுறு மறைவெலாம் புகலும்*
*நிக்ஷியே புலன்க ளினொடினை தவர்க ளின்றெடு மேகமா வான்மா*
*வாக்கிய மருநம் பவளவா யமுத வல்லியே களர்வள ருமையே.* 33

*ஒருவனே தேவ னெனுமறை முறையி லுருவவேற் றுமை யுதாசினங்*
*தருமித மிசை கிகருயிர்க் கோட்டி தமமன வுபாதிக ளறைவார்*
*தெருவிலே திரிந்து தேவிநிற் செபித்துத் தேகயாத் திரைகடந் திடுவான்*
*வருமவை கொளுமா தவர்பணி யமுத வல்லியே களர்வள ருமையே.* 34

## 15. அவித்தைபாதிகளின் ஆவிருத அனுவிருத சாக்ஷி சைதன்னிய பிரகாசியத்வ விசாரம்.

*சான்றிருண் மறைப்ப வொளிர்ப்பதெவ் வளமாஞ் சாற்றென ராகுசந் திர*
*ன்போற், சான்றெழுத் தபற்பான் மறைப்பென வருளிச் சமூக்கனே*
*னிழுக்கறப் புரிந்தாய். தோன்றிய மாலா தாரகற் கருளுந் தோன்றலைப்*
*பிரிந்துறு துறையும், வான்றவர் வழுத்து மணியணி யமுத வல்லியே*
*களர்வள ருமையே.* 35

*சேதன மறைப்பின் றெனிற்சுக பாகந் தெரிதர லுரிந் தெனிற் றடையென்*
*றோதுற பரம ப்ரேமை யின்னிடமா மொன்னுறு பவஞ்சக மறைப்பா*
*மிதினை யிதயத் தெண்ணெனப் பணித்தா யென்றமுன் பதமற வார்தம்*
*வாதினை யறுத்து முத்தியீ யமுத வல்லியே களர்வள ருமையே.* 36

## 16. அகங்கா ராதி ஸ்மிருதி சித்தார்த்த சமஸ்கா ராதான விசாரம்.

நித்தியச் சான்று லச்சமஸ் கார னிகழ்விலை யதினொளி ரகங்கா
ரத்தனு சந்தா னமதெங்ங னெனவே ரமியெந்த விருத்தியார் சாக்கி
யெத்தினை யிலக்கு மதனினு லதன்ற னெழிற்சமஸ் காரமா மென்றாய்
வத்தெலும் பணிவ னுயகி யமுத வல்லியே களர்வள ருமையே. 37

என்னுமின் னியம மிருத்தலி னயலோ ரிரும்பொருள் விருத்திஜ வதனுன்
மன்னுமாங் கார வவச்சின மதனுன் பருவுறு கரியநித் தியமா
மன்னதாற் சமஸ்கா ரம்மகங் கார வருமிரு தியுமுறு மென்றாய்
வன்னியா வடிவ வன்னையே யமுத வல்லியே களர்வள ருமையே. 38

அகமுரு விருத்தி யவித்தியா விருத்தி யாசரித் தடைசமஸ் கார
மிகவிருத் தலினன் மிருதியு மேனு மிளிரக முபாசனை யுறழ
வகமது ஞான மன்றள வையினு லாயதன் றதனினு லென்றாய்
வகிர்தரு மைம்பா லெழிலியா யமுத வல்லியே களர்வள ருமையே. 39

கிரியையன் றகமோ ஞானமா மனமாங் கிளர்பிர மாணமா மதனு
லருமதைக் கவர்த லாசல விதனு லாம்பகிர் காண்விருத் தியினு
லெரிவுறு மிருடா னென்றனை யிடபத் தெந்தையொ டெழினிறை மருங்கில்
வருதிருப் பவனிக் காட்சியி யமுத வல்லியே களர்வள ருமையே. 40

வழுவிதம் விருத்தி யிருள்கெட மயலும் வழுவுறு மிதுவழு வுறினுங்
கழிகிளிஞ் சலிலா மமிசவஞ் ஞானக் காழினுல் வெள்ளியின் மயலாஞ்
செழியிதை மனதிற் றேறென வருளுந் தெருளினை மருளனேன் மறவேன்
வழுதியின் மகளா யாழியோச் சமுத வல்லியே களர்வள ருமையே. 41

இதமறைப் பமிச மிரியினு மெழுச்சி யேதுவாய் வெள்ளியின் மயற்கே
யிதுவெளி யெனவே மாசினு னுறலா னிதுவிலை யிருள்கெட விலையாஞ்
சுதவறி யெனவே சொற்றனை கல்லாச் சொற்கொடு சொல்லுமென் றுதியை
வதறுத லெனவே மகிழ்வுறு மமுத வல்லியே களர்வள ருமையே. 42

ஒருவிதமேது வயல் பயன் பயவா வோதத னபிவியக்த சான்றாற்
றெரிதரு மிதமோ மயல்பயி லேது திகழிதம் ரஜதமற் றதுவாய்க்
கருதென வுரைத்துத் திருத்தினை கழல்சேர் கடையனை யருள்விழி யதனுல்
வரகவி யாக்கும் விரகியே யமுத வல்லியே களர்வள ருமையே. 43

ஞானமற் றிரண்டே விதமப லேது நல்லிரண் டறியுமற் றதுதான்
மானத மிதமா மற்றது விருட்டா மருவுறு திதற்தனே யென்றாய்
சானக மயிலுங் கயிலைவாழ் மயிலுங் களிப்புறக் கண்முன நடிப்ப
வானவர் பாட மகிழ்வுறு மமுத வல்லியே களர்வள ருமையே. 44

## 17. அபரோக்ஷானுபூதியின்பொருட்டு விருத்தியின் நிர்க்கம விசாரம்.

கிளம்புறு விருத்தி யறிவினு ளுங் கிளம்புறல் பயனிலென் றிடிஞே
களம்படு விடய சித்திலக் கிடுவான் கருத்துறு விருத்தியென் றனைநீ
யுளம்புகு வரங்க ளியாவையு முதவி யுன்றிரு வடிபணி பவரை
வளம்பெற வளர்க்குங் கருணையா யமுத வல்லியே களர்வள ருமையே. 45

சிறுவினைற் றமையா வின்பெனக் கடத்திற் செறிவுற வெளிவிருத் திய
மதுகர்த மாதி வெளிவரல் கடுப்ப மருவுமென் றருளினு லறைந்தாய் [தால்
துதிதரு மெனது மனத்தனை யினிய துயரற் சினகர மாக்கி
வதிதரு கருணை நிலையமே யமுத வல்லியே களர்வள ருமையே. 46

மண்டிய விடயா வரணநீக் காயின் மற்றெனே வெளிவிருத் தியதாற்
சண்டைஞா ஞேஞ்ஞா னங்களுக் கேலுஞ் சார்புற வெளியிலென் றறைந்தாய்
திண்டிறன் மாறன் மகாரதன் றனக்குத் திருச்சுத ரிரண்டரு டேவன்
வண்டடர் மாலை மார்புறு மமுத வல்லியே களர்வள ருமையே. 47

சேருறு மிருட்குத் தன்னிலைக் கஎத்த சித்திறு னிக்கமாம் விருத்தி
சாருமாஞ் சமவெர் தமவொளிக் கிரிவு சாருங்கண் கூட்டிஞ னென்றாய்
தூருவா சரைப்போல் வீரசே கரனைத் துயரற் பணிசெயப் பணித்த
வாரியன் பணியும் பதமல ரமுத வல்லியே களர்வள ருமையே. 48

நல்லறி வுபரா கப்பொருட் டபேத நாடபி வியக்தியின் பொருட்டாஞ்
சொல்விய னென்பா லுபரிட மொழிக டோய்வுறு மபேதமா மென்றாய்
செல்லலை நீக்கப் வென்னையும் பொருளாய் நீயிரு ஞெடிகடிந் தாள
வல்லையோ வென்ன வோமெறு மமுத வல்லியே களர்வள ருமையே. 49

முதலாவது சமன்வயப்பிரகரணம் முற்றும்.

# இரண்டாவது விரோதப் பிரகரணம்.

## 1 சுருதிப்பிரத்தியக்ஷங்களின் பிராபல்ய தௌர்ப்பல்ய விசாரம்.

திருத்தனிச் சுருதி முடிச்சமன் வயமோ திகழ்ந்திடா கடசற்காட் சியினு
லருத்தெனக் காட்சி சத்தையே கவரு மகந்தனி லமையென வறைந்தா
யுருத்திர பிரமலோக்கிய ஞான வுயர்ந்தபுட் கரணிநாற் றிசையும்
வருத்தன மாக நாப்பணே யமுத வல்லியே களர்வள ருமையே. 50

கடமுதற் பொறிக்காஞ் சன்மதி யெனது கனவிருப் புணருங்கண் ணுணர்ந்துந்
திடசத்வா வேத கத்வமா னத்வஞ் சிவணிடா தெனவெனக் குரைத்தாய்
பிடிநடை மாதர் மயலின்பின் னுணங்காப் பெருவர மென்றனுக் கருள்வோய்
வடிகொள்சிந் துரஞ்சார் கனதன வமுத வல்லியே களர்வள ருமையே. 51

சாதியா தியதா மித்தையாம் பிரமசற்கிர கணம்வரை சத்தே
யோதிய கவர்ச்சி யாதலின் மயங்கே லுண்மையென் றெனக்கினி துரைத்தாய்
நீதியா யடைந்தார்க் கருள்செயு மிறைவ னிற்றெழு தருள்செய்வா யெனவே
வாதியா தருளுந் தெருட்சுட ரமுத வல்லியே களர்வள ருமையே. 52

சுருதிநிர்த்தோஷம் பிந்திய தெனினுஞ் சொன்முதற் காட்சிதோ டமதே
சுருதிதாற் பரிய வதிபிர மாணஞ் சுருதிநற் றகைமையு மென்றாய்
தருதியென் றிரப்ப முத்தியை யடியர் தடையிலை யெனவுயர் கொடியால்
வருதியொன் றழைக்கு முயிர்த்துணை யமுத வல்லியே களர்வள ருமையே 53

## சுருதிப் பிரத்தியக்ஷங்களின் உபஜீவகபாவ விரோத பரிகார விசாரம்.

வருணமார் காட்சி ஜீவியம் பகைக்கில் வரமறைக் கென்னண மெனவே[தாய்
வருணமார் காட்சி மெய்மய லொலிக்காம் வண்மையைப் புன்மையேற் குரைத்
வருணமுத் தேவர் முத்தொழி னடத்தும் வகையினுக் கேதுவாய்ச் சான்றாய்
வருணமுத் தேவி யாயம ரமுத வல்லியே களர்வள ருமையே 54

யோக்கிய மெனினு மில்வரைச் சத்தா யுக்தமா முண்மைநீக் கதுவா
மாக்கறுந் தத்வ சத்வமே யுலவ லாகியு முரணிலென் றறைந்தாய்
திக்கதம் வீடில் வீடெனப் புகன்று சினந்தவ மாக்கரற் கினியாய்
வாக்கரு மறையாய் புரையிலா யமுத வல்லியே களர்வள ருமையே. 55

உண்மைவிட் டனிய கற்பனை யிலையே லொண்வெளிக் கற்பமெய்ப் படியாங்
கண்மையின் றனர்கங் காட்சியிற் சொல்லாங் கற்பனை யொப்பெனப் புக
திண்மைமெய்ம் முனிவ னிருவா ரெனவே திரவிட ருக்தியாற் பாட (ன்றாய்
வண்மையாய்க் கேட்டு மகிழ்வுறு மமுத வல்லியே களர்வள ருமையே. 56

## 3. பிரதிபிம்பத்திற்குப் பிம்பா பேதபேதங்களாற் சத்தியத்வ மித்தியாத்வவிசாரம்.

மயற்றலச் சன்னி கருஷமின் மையிறுன் மதிமுக முகுராமு டயலாம்
புயனிறத் தாயே யென்றிடி றுடி பொருந்துதற் றன்மையா ரோப
மயன்மய விலையென் றறைந்தனை யனங்க னருர்தறு வனந்தரு தாளம்
வயுற்றரு பவளங் கலந்தணி யமுத வல்லியே களர்வள ருமையே. 57

ஆதரி சத்தே யறுபவ வதன மபன்மய லேதுவின் றென்னி
லாதரி விக்ஷே பம்முள தென்று நின்மலே கருணையா லுரைத்தாய்
குதெலாங் காத வலியதாம் பிரம குத்திரம் புரியுமா வலியை
வாதரா யணர்க்குக் கொடுத்தரு ளமுத வல்லியே களர்வள ருமையே. 58

மூலவஞ் ஞான மேதுவாம் பிம்ப முட்டுறு முகுர தியாத
மேலபிம் பாதி தோஷஜத் திறந்தா லெய்தும்பரா திநிகத் தகைமை
சிலனே யுணவென் றறைற்றிய வுரையைச் சிறியனேன் மறத்தலுந் தகுமோ
வாலையே யுலக மூலமே யமுத வல்லியே களர்வள ருமையே. 59

## 4. ஸ்வப்நாதிஷ்டான விசாரம்.

துதைசறு மூல விருளினித் திரையாற் றெல்லென துணர்வுபாத் தியமா
மதாசறு வறிவாற் கெடுமென தறிவி னயற்கெடற் பிரதிபா சிகமென்
னிதையடி காயே றுணருமா றளித்தா யின்பமெய் யொளியறு யிருளை
வதைசெயும் விரகி வளர்செழி யமுத வல்லியே களர்வள ருமையே. 60

அவத்தைசித் திரையே யேதுவாம் விசுவ னறிதரி லழியுசித் திரைசா
ரவத்தகக் கரண வபிவிய க்தமதா மறிவறி லரும்புமென் றறைந்தாய்
விவத்தைக னிலவ யாவையும் பொறித்த வேதாற் றலைவியே மலையின்
வவத்திருக் குதலை மதலையே யமுத வல்லியே களர்வள ருமையே. 61

தப்பவல் லவித்தைப் பதிவிம்ப வறிவிற் சயஞ்சுடர் விருத்திவேண் டிலையா
மைபசங் கிருதி யுபகித வதன்ற னரும்பதி விம்பசித் தினிறு
மைபலற் றறிதி யென்றருள் புரிந்தாய் மலையத்து வசன்திரு மகளாய்
வையகம் புரந்த குமரியே யமுத வல்லியே களர்வள ருமையே. 62

சுத்தித மறிவுப் பதிவிம்ப மதனிற் சொல்லறா வனன்யவேத் யமதா
மத்தித மகிச வவச்சின பிம்பத் தவ்வவ்வ வவித்தையா சிரயச்
சித்தது காறு மென்றெனை சிறந்த தினகரன் றனைச்சின கரமார்
சத்திக ணைக்க ரசைத்தரு ளமுத வல்லியே களர்வள ருமையே. 63

## 5. ஸவப்நபதார்த்தானுபவ விசாரம்.

கழியிப்பி வெள்ளி சாக்ஷாத்காரமாகக் கனுக்கஜத் தநுமய லாகு
மொழி திட்டிசிருட்டி தனினனு வதுவு முகுமய லெனவுரைத் தனையால்
செழிதரு வனங்கற் பகவனங் களரி செறிபரி ஜாதமந் தார
வழிபடு பெயரூ ரமர்தரு மமுத வல்லியே களர்வள ருமையே. 64

## 6. திருஷ்டி சிருஷ்டி கற்பக விசாரம்.

அனிசமாந் திருட்டி சிருட்டியி லவித்தை யதனொடு மகிலமுன் னதுசா
ரினியறி வியு மிதுவவித் தையனு தியினைவிட் டயலின் கற்பகமா
மெனவரு ளினைநீ யெழின்முகங் கரங்க ளிருபதந் தனம்விழி யாவும்
வனசபூ வரும்பு விதமுற ழமுத வல்லியே களர்வள ருமையே. 65

திட்டியே சிருட்டி யயலிலை பேதந் திகழ்த்துறு மளவையில் சிருட்டி
திட்டி வாதத்தே யசிர்வச னீயஞ் செப்புதல் தப்பிலை யென்றாய்
மட்டுலாங் கமல மாயிர மெடுத்து மகிழ்செயும் பூசையாற் றிறிக்காம்
வட்டபா ணியன்றன் றங்கையே யமுத வல்லியே களர்வள ருமையே 66

## 7. மித்தியா பூதத்திற்கும் வியாவகாரிக சத்தியார்த்த கிரியாகாரித்வ விசாரம்.

உலகது பொய்யே லர்த்தநற் கிரியை யுறுதல்கா ரித்வஞ்சொப் பனம்போ
லிலகுறு பொருள்போய்த் தொழினனு வரலா விரண்டினிற்சத்தைபே தமதா
மலரொளி யிடத்தே புகுவன்செய் தமந்தா னர்த்தநற் கிரியையா மென்றாய்
வலைமகள் குறமின் மாமியே யமுதவல்லியே களர்வள ருமையே. 67

அருத்தசத் தையினை யத்தொழில் விழையா தையபொய் மெய்வடி வொன்
மருத்நல நீரிற் சாதியின் மாந்தின் மனுமருத் தத்தொழி லோடல் [றே
திருந்தசர் வார்த்தக் கிரியையி லென்றாய் செயசெய செயவென வமரர்
வலாரத்திரு மகளாய் வருமரு மமுத வல்லியே களர்வள ருமையே. 68

## 8. மித்தியாத் தன்மைக்கு மித்தியாத் தன்மையேனும் பிரபஞ்சமித்தியாத்வ விசாரம்.

மித்தையின் றன்மை மித்தையே யுலக மித்தையன் றத்வைத ஹானி,
யத்தன்மங் களுக்குத் தன்பகை நீக்கி லத்தன்மி சமசத்தா கத்வ,
மொத்ததாமென்று யெவர்கடம் மாறுமொழிக்கொளுப் பவக்கடல் கடத்தும்,
வத்தையே யெனையாள் முத்தமே யமுத வல்லியே களர்வா ருமையே 69

## 9. ஔபாதிக ஜீவபேதத்தாற் சுகதுக்காதி சாங்கர்ய வியவஸ்தா விசாரம்.

பின்னசி வர்களாற் சத்விதி யத்வம் பிறங்குறு பின்னமின் றுபாதி
பின்னமின் பாறி யுபசித மொன்றும் பின்னின்ப மாதியெவ் வனமாங்
கன்னலே யமுதே கருணைவா ரிதியே கணபதி வடிவவோங் கார
வன்னல சுதியமே யுன்னரு மமுத வல்லியே களர்வள ருமையே. 70

மறைமனக் கறைய வதுகொடே விவத்தை மன்சிதா பாசனுக் குளமார்ந்
துறைவிசிட் டமதிற் கென்றருள் புரிந்தா யுண்மையை யுணருறா லோத
விறைவி நின்கழலைப் பணிதா னினையே யென்றுரு வாகவுன் றுறுதல்
வறியன்பெற் றிடவே யருடரு மமுத வல்லியே களர்வள ருமையே. 71

போத்தரு மனசான் னித்தியத் தறிவிற் போத்தரு வயலொரு தாய்தி
லேத்தமா சிரய பேதமே யீறு மிருமையின் பொய்யையென் றனைநீ
தோத்திரம் வேத சாத்திர நால்வர் தோடுடை யாதிய மொழிகள்
வாத்திய முழக்கப் பார்த்திடு மமுத வல்லியே களர்வள ருமையே. 72

## 10. ஜீவர்களின் சுகாதியனனு சந்தானப் பிரயோஜ கோபாதி விசாரம்.

இதவிங்ங ஞக வதனை து கவர்ச்சி யின்மையி னேதுவென் போகா
யதனவி சிலேஷ சாலியாற் போகா யதனபே தங்களே துகளாஞ் [வேன்
சுதவென வருநந் சொல்லினை யெளியேன் சொப்பனந் தன்னினு மற
வதையினைச் சிதைக்குஞ் சுதையெறு மமுத வல்லியே களர்வள ருமையே

உடன்மன மற்றா னத்தின்வேற் றமையா முலகுபொய் யுடலிறை யேக
மடர்பகை யளவை மூன்றுரு வதனு லறியென வறியனுக் குரைத்தாய்
வடவன லினைய மனப்பகை யுருக்க மன்னிய முனிவருக் கருள்செய்
வடநிழ லிறைவ னிறைவியே யமுத வல்லியே களர்வள ருமையே. 74

## இரண்டாவது அவிரோதப் பிரகரணம் முற்றும்.

## மூன்றாவது சாதனப் பிரகரணம்.

## 1. கன்மங்களின் வித்யோப யோகப்பிரகார விசாரம்.

ஞானம தாலே நின்னடை வெவண நற்மொழின் மிருதியா லெனவே
ஞானமத் றலவா மறையினு லதிபு நசையினிற் மொழிற்பயன் ஞான
மானதி லெனவே யறைந்தருள் புரிந்தா யன்பர்க ளன்பினு லியும்
வானவ ரசமார் றொடையல்வே யமுத வல்லியே களர்வள ருமையே. 75

## 2. ஆசிரமகன் மங்கட்கே வித்யோபயோக விசாரம்

விதிதவா சிரம கருமமா மேது விதுரநற் கருமமு மேது
கநித நித்தியங்க ளேதுவா மன்றிக் காமியங் களுமெனக் கணித்தாய்
சதுருடன் கயிலை யேகியொன் றீந்த தனமிரண் டுடன்சதுந் தரனே
வதுவைசெய் துனது முடியரு ளமுத வல்லியே களர்வள ருமையே. 76

## 3. சந்யாசத்திற்கு வித்யாவிநியோக விசாரம்.

ஆசிலாத் துறவின் வாயினற் றொழிலா லழிவிலா வகவழி வதிட்ட
மாசவ ணுங்கந் திட்ட விக்ஷேப மாறன்மூ வருக்கொரு வருக்கே
பேசலா மென் றாய் ராசுவி னன்பாற் பெருகிய வீரசே கரத்தால்
வாசமொண் கயிலை நாணவாற் றமுத வல்லியே களர்வள ருமையே. 77

## 4. சிரவணாதிகார விசாரம்.

துறவிக டமக்கே சவணமுக் கியமாந் துன்னர சாதிகட் கமுக்யந்
தறுகலற் றுணர்தி யென்றனை மாலா தாரகன் றன்னையு மரிய
துறவியர் வேந்தா முனிவரன் றனையுந் துணையெனு மிராசுவை வீர
வறவமா தவனைப் பதத்தணி யமுத வல்லியே களர்வள ருமையே. 78

## 5. அமுக்கியாதிகாரியாற்றிய சிரவணத்திற்கு ஜன்மாந் தரீய ஞானோபயோகித்வ விசாரம்.

சென்மவந் தரத்தாம் ஞானமார் சவணந் திருட்டமே லதிட்டமென் னென
கன்மவ பூர்வஞ் செய்சவ ணோப காரியா மறுபிறப் பகனென் (வே
றென்மன மாசு கழீஇயதை யெளியே னென்னெனப் புகலுவ னெந்தாய்
வன்மனக் கொடியர் மருவுறு வமுத வல்லியே களர்வள ருமையே. 79

நின்மல ஞானம் வரைசெயுஞ் சவண நியமமா மதிட்டவே துவதா
நன்மக சவண மெண்பது மிருநி நாளினின் ஞானமா மென்றாய்
புன்மல நிறைந்த வரிவையர் மோகம் பொருந்துறு திருந்திட வேண்ட
வன்மமில் லாம லருடரு மமுத வல்லியே களர்வள ருமையே. 80

## 6. நிர்க்குணத்திற்கு ரூபாசியத்வ விசாரம்.

சிரவண நிகர்ப்பப் பிரமவித் தையினிற் றிகழுநிர்க் குணவுபா சனைதான்
பிரசனம் புகலு முக்கிய வேத பேறுதி யென்றசொற் றனைநீ
குருமொழி யுளத்திற் கொண்டுமின் னடியேன் குமரியர் மயலின்மங் காமே
வரதையா யருளும் நல்லையே யமுத வல்லியே களர்வள ருமையே. 81

## 7. பிரஹ்மசாக்ஷாத்கார காரண விசாரம்.

தினைதகோ சாத்திற் காரணமென் னெனவே நீள்பிர சங்கியா னந்தான்
மனநமேற் றுணையா மகமனு பவத்தே மன்னலாற் காரணமா வாக்ய
மனனியா மறைபா லென்றமை சிறிதோ மலர்தலை யுலகெலாங் காக்கும்
வனதமே னியன்றன் றங்கையே யமுத வல்லியே களர்வள ருமையே. 82

## 8. சாப்தாபரோக்ஷ விசாரம்.

வரிவிதி போமம் புரையவே காட்சி வளர்ந்தபா வனெநிறை மொழியால்
வரதியா னஞ்சார் மனகட்ட விட்ட மங்கைபா லெனமகா மொழியா
மரியவென் குமர வென்றனை முடவனருணனும் ஞானபீ குறவீ
வரபல நிறையும் பொங்கர்வா ழமுத வல்லியே களர்வள ருமையே. 83

சுயமப ரோக்ஷம் யாவென துணர்வு சுருதவாக் யஜமபி வியக்த
சுயவென தருவே வெனக்குச்சா க்ஷாத்தாஞ் சொல்பொருட் கெனதபேத
விமையுமென் றிசைத்தா யிமவிறைக் கரிய வினியகீ தையையீ யம்மே[த்தா
வயவரும் கருள்வற் கருடரு மமுத வல்லியே களர்வள ருமையே. 84

## 9. அஞ்ஞான நிவர்த்தகத்வ விசாரம்.

விழிபெறும் விருத்தி சினதிரு னிக்கவேண்டுமென் றிடிலது வெனையோ
தழுவலில் தழுவி னதிட்டமார் வேதாந் தஜமதா மென்றருள் புரிந்தாய்
செழியனன் மகளாய்த் திருவிளை யாடுஞ் செல்வமே யென்னுயிர்த் துணை
வழிவழி யடிமை யெனைக்கொரு மமுத வல்லியே களர்வள ருமையே. [யே

தத்துவ மசியால் விருத்தியாஞ் சொருப சம்பந்தச் சிறப்பிறு விருளைக்
கோத்துநற் றுயைக் கொல்வதெங் ஙனமாங் குழைகழை யெனவறி யென்றாய்
சத்திய ஞான வனந்தவா னந்த சம்புவா மெம்பிராக் கினியாய்
வத்திய மில்லாச் சுத்தமே யமுத வல்லியே களர்வள ருமையே. 86

## 10. பிரஹ்மாகார விருத்தி நாசக விசாரம்.

தெள்ளிய விருத்தி நாக்கமென் னனமாஞ் செப்பெனக் கதகரே ணுவைப்
வள்ளய பதிர பயமென வெரித்த வளர்திரு ணைக்குழு வனல்போற் (போல்
கன்மமற் றறியென் றருளினை யிருள்செய் கானகந் தளிர்பார ஞேடும்
வள்ளியை மணக்குங் குழவியீ யமுத வல்லியே களர்வள ருமையே. 87

விருத்தியா ருட சாகதியே யெவையும் வீழ்த்திடும் ரவிகரன் போன்றே
விருத்தியா விருள்போ மூலகத னழிவால் விடலே சத்திறு லென்றாய்
கருத்தவொன் மலட வசுரனை முதலாங் காமமா நிகையெலா நொடியில்
வருத்தியின் பனித்த திருத்தியே யமுத வல்லியே களர்வள ருமையே. 88

மூன்றுவது சாதனப் பிரகரணம் முற்றும்.

## நான்காவது பலப்பிரகரணம்.

### 1. அவித்யாலேச விசாரம்.

எண்ணும்வீ டெதனு லஃதெது வெனவே யிருளின்வி க்ஷேபமா மிங்கு
நண்ணும்வா தனையா மெரிபுகு படமா நண்ணுறு வனுவுமென் றனைநீ
கண்ணரு மிளங்கொம் பன்னையே மின்னுங் கவின்மிகு தேவியே பசிய
வண்ணமா ருருவே யருவமே யமுத வல்லியே களர்வள ருமையே. 89

### 2. அவத்யநிவிருத்திஸ்வரூப விசாரம்.

நிக்கமென் னெனவே யென்னதே வைந்தா நிகழ்பிர காரமாம் ஞானக்
காக்கிய காலத் தாம்விரி விருத்தி கணிகமாம் பாவமாந் தொழிலாம்
ஆக்கவு மதனைக் காக்கவும் போக்கி யாடவு மூவருக் காக்கி
வாக்கொடு மனமுங் கடந்துள வமுத வல்லியே களர்வள ருமையே. 90

### 3. முக்திஸ்வரூப விசாரம்.

கணிக்கமேற் றிரமி லென்றிடிற் பிரமக் களிப்படை விடர்வொழி வாகு
நுணுக்கவிவ் விரண்டிற் றுயரறல் சேட நுவன்றது சொருபவின் பென்றாய்
குணக்கட மணக்கும் பிணக்கறு கரியின் குரைகழற் றொழுகவு நினதாள்
வணக்கமு மறவா வரந்தரு மமுத வல்லியே களர்வள ருமையே. 91

### 4. பிரஹ்மானந்தத்தின் பிராப்யத்வ விசாரம்.

நித்திய வடைவ தென்னினு மிருளா னின்றது கெடிலெழல் பணிபோன்
மெத்தவின் பிலையென் மையலோ வுணர்வான் மெல்வுறி னடைவென மிளி
தத்தமா யுடலே முதலன வாங்கிச் சச்சிதா னந்தமே யீந்து [ர்ந்தசய்
வத்தகம் புரியுஞ் சிறுமியே யமுத வல்லியே களர்வள ருமையே. 92

ஆனந்த மிருந்த காட்சியில் புமர்த்த மரியகற் காட்சியால் வீடா
மானந்த வுணர்வு மைபலாற் பேத மழியிலோ பேதமில் காட்சி
ஏனிந்த மரும மறிந்திலை யென்று யெண்ணினு மின்னகர் காண்பான்
வானந்தந் தருளும் வள்ளலே யமுத வல்லியே களர்வள ருமையே. 93

### 5. முக்தனுக்குப் பிரஹ்ம பாவ விசாரம்.

ஈசனு யுறலோ முத்தன்றாய் நீயோ யிருத்தலோ வோருயிர் வாதத்
தாசிலா நீயா மளவிலா வுயிரி லவன்பதி விம்பனு முனையெ
தேசுறப் பெறலா மென்றனைத் தெளிந்த தேசிக ரறைந்தனர் மலரின்
வாசமே யென்னு நிறைதரு மமுத வல்லியே களர்வள ருமையே. 94

விம்பமிச் சாந்தே யிச்சா வடைவாம் விம்பமுஞ் சற்றத மெய்யாய்
கம்பமி லதிருன் கடர்நெலா விகற்பங் களங்கமில் கேவல வெனேயே
பம்புவ னென்றுப் பரமமே லான பாற்சுடர் வடிவமே கீர்த்தி
வம்பலெட் டெகுர் தருவன வமுத வல்லியே ளர்வள ருமையே. 95

## நான்காவது பலப்பிரகரணம் முற்றும்.

சருவமா மறையின் முடிகளுக் கொன்றுஞ் சத்தியாத் துவிதமா கின்பால்
வருஞ்சமன் வயத்தை முதறனிற் புகல மருளலுக் கருளினைப் புரிந்தாய்
மாகத வபுவி லன்பர்க ளணிசெய் மல்லிகை யாதிய வலக்கல்
வரிபழி பாட மகிழ்வுறு மமுத வல்லியே ளர்வள ருமையே. 96

நிகழ்விரு வேவைக்கும் விடைவிடுத் தருளி செறியவி ரோதமே யறிவான்
சுகமிரண் டதனிற் சொற்றிட வருளைச் சொரிந்தெனைப் பாடுமா பணித்தா
யிகழொடு புகழை யென்றுமு திருக்கு மிருந்தவர்க் கேவலே செய்வான்
வருவரு னெனக்கி குமுதமே யமுத வல்லியே ளர்வள ருமையே. 97

மூன்றினி லதற்குச் சாதன ஞான முபவிறு மயலதன் றெனவே
யான்றெரிந் திடமா றருணனி சுரந்து யாக்கவே புரிந்தனை யனையே
கான்றசொ றதனிற் கண்டுபொய்ப் போகங் கைவிடு மாதவர்க் கருளும்
வான்றனிச் சுடர்க்குஞ் சுடர்தரு மமுத வல்லியே ளர்வள ருமையே. 98

முடிவதிற் புகன்ற ஞானசா தனத்தான் முற்றுறு பலமெலா முணர
வடியனுக் கருளா லருளியே முடித்தா யம்மநின் னளிமகத் ததுவால்
பொடியணி பரமன் வர்தமிற் றெழுகா புழுகொடு தழுவவப் பொடிசார்
வடிவுடை யெனது மனமுறு மமுத வல்லியே ளர்வள ருமையே. 99

அன்பர்கள் பாடென் றறைதர வதிவி லடியனேன் குதலைமென் மொழியா
னின்பெரு மருளா லுணர்ந்தவை மொழிந்தே னிபுய மணிந்தெனைக் காகா
மன்பர வீர சேகர ஞான வலம்புரிக் களித்தவை யென் றருளும்
வன்பெரும் பிடியே வாழிநீ யமுத வல்லியே ளர்வள ருமையே. 100


45195

அத்வைதாமிர்த சாரசங்கிரகம் என்னும்

அமிர்தவல்லிமாலை

முற்றும்.

ஸ்ரீ மகா கணபதி துணை.